Regd. No. 2975. ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் 170

P. B. ANNANGARACHARYA, KANCHEEPURAM.

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

வருடச் சந்தா ரூ. 5 ஜீவியச் சந்தா ரூ. 100.

ஜீவியச் சந்தாதாரர்களுக்கு பத்திரிகை சாச்வதமாக அனுப்பப்பட்டு வருவது தவிர 120 ரூபா விலையுள்ள புத்தகங்கள் உடனே அனுப்பப்படும்.

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல்வாழி *
தாழ்வாதுமில்குரவர் தாம் வாழி *ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி *
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

சுபகிருது௵ மாசி௴ 1963௵ மார்ச்சு௴.

## சின்ன காஞ்சிபுரம் க்ரந்தமாலா ஆபீஸ்

# ஸ்ரீமத் P. B. அண்ணங்கராசாரியார் ஸ்வாமிகளின்

## பதிப்பு நூல்களுக்குச் சுருக்கமான விளம்பரம்.

1 நாலாயிர திவ்யப்பிரபந்தம் முழுமைக்கும் விரிவான திவ்யார்த்த தீபிகையுரை. தனித்தனியாகவாங்கினால் 65 ரூ. ஒரே தடவையில் 60 ரூ.

2 உபதேசரத்தினமாலை, திருவாய்மொழி நூற்றந்தாதி, ஆர்த்திப்பிரபந்தம், ஞானஸாரம், பிரமேயஸாரம், ஸப்தகாதை இவற்றின் உரையும் சேர்ந்து நித்தியாநுஸந்தானம் முழுமைக்கும் விளக்கவுரை ரூ. 3-50.

3. முகுந்தமாலை தொடங்கி, ஆளவந்தார் எம்பெருமானார் கூரத்தாழ்வான் பட்டர் கூரநாராயண ஜீயர் மணவாள மாமுனிகள் தச்சிஷ்யர்கள் வரையில் ஸாதித்த பெரிய சிறிய ஸகல ஸ்தோத்ரங்களுக்கும் உரை தனித்தனியாக வாங்கினால் 25 ரூ. ஏககாலத்திலானால் 20 ரூ.

4. ஹயக்ரீவ ஸ்தோத்ரம், கோதாஸ்துதி, பரமார்த்த ஸ்துதி, வைராக்ய பஞ்சகம் ந்யாஸதசகம், பகவத் தியான ஸோபானம், தசாவதார ஸ்தோத்ரம், யதோக்தகாரி, அஷ்டபுஜ. காமாஸிகா ஸ்தோத்ரங்கள் ஆகிய தேசிக ஸ்தோத்ரங்களுக்கு விரிவுரை 4 ரூ. தேசிக ரஹஸ்யம் (1 To 16)ரூ 1.

5. ஆழ்வார்கள் வைபவம், ஸகல பூர்வாசார்ய ப்ரபாவம், அத்திகிரி வைபவம், ஆழ்வார்கள் அநுபவித்த பகவத் கதைகள், நரஸிம்ஹாவதார சரிதம், அபூர்வ ராமாயணம், ஸ்ரீஜயந்தி மலர் இவை யெல்லாம் சேர்ந்து ரூ 5

6. வான்மீகி ராமாயண வசனம், (உத்தரகாண்டமுட்பட எளிய வசன நடை) ரூ. 8.

7. நாலாயிர திவ்யப்பிரபந்தம் மூலம் மட்டும். பலவகை யநுபந்தங்களுடன் சிறந்த பயிண்டு ரூ. 8

8. பகவத் ராமாநுஜ க்ரந்தமாலை. உடையவர் அருளிச்செய்த ஸகல க்ரந்தங்களும் ஒரே ஸம்புடம் சிறந்த பயிண்டு. தேவநாகர லிபி ரூ. 15.

9. பகவத் விஷயம் ஈடுமுப்பத்தாறுயிரப்படி (பூர்த்தியாக இரண்டு ஸம்புடம். நித்யகாலக்ஷேபத்திற்கு. ரூ. 25.

10. ஷை தெலுங்கு லிபி ரூ. 25.

11. ஸ்ரீ வரவர முநீந்த்ர க்ரந்தமாலை (மணவாள மாமுனிகளருளிச் செய்த நான்கு ரஹஸ்யங்களின் வியாக்கியானங்கள் ஒரே ஸம்புடம்; மிகச் சிறந்த பயிண்டு. தெலுங்கு லிபி ரூ. 8.

12. ஸகல பூர்வாசார்யஸ்தோத்ரமாலை நாகரலிபிரூ.3.

13. ஷை தெலுங்கு லிபி ரூ. 2

14. வேதாந்த தேசிக ஸகல ஸ்தோத்ராவளீ (தேவநாகர லிபி ரூ. 3.

15 ஷை தெலுங்கு லிபி ரூ. 3-25.

16. யாதவாப்யுதயம், ஹம்ஸஸந்தேசம், ஸுபாஷித நீவி, ஸங்கல்ப ஸூர்யோதயம் (இவை நான்கும் ஒரு ஸம்புடம் தேவநாகரி லிபி) ரூ. 6.

17, தத்வடீகை; நிக்ஷேபரக்ஷை, ஸச்சரித்ரரக்ஷை, ஸ்ரீபாஞ்சராத்ரரக்ஷை ரூ. 6.

18. தானே யெழுதிய தன் சரிதை P. B. A. ஜீவிய சரிதம் ரூ 2.

19 த்ரமிடோப நிஷத் ப்ரபாவ ஸர்வஸ்வம் (எம்பெருமானார் ஸூக்திகள் திவ்ய ப்ரபந்தங்களை யடியொற்றியவையென்று நிரூபிப்பது ரூ. 2

20. ஸத்ஸம்ப்ரதாயஸுதாநிதி (ஸம்ஸ்க்ருத நூல், தேவநாகரலிபி. தென்னாசார்ய ஸம்ப்ரதாய ஸகலார்த்த விசேஷங்களுங் கொண்டது. ரூ, 2.

21. கம்பரின்பக்கவித் திரட்டு. கம்பராமாயணம் 1, 2 காண்டங்களிலிருந்து தொகுத்த மிகச் சிறந்த பல பாடல்கள் பதவுரை பொழிப்புரையுடன் ரூ. 2,

22. பிள்ளைப்பெருமாளையங்காருடைய அஷ்டப்பிரபந்தத்திற் சேர்ந்த நூற்றெட்டுத் திருப்பதி யந்தாதி விளக்கவுரையுடன் ரூ. 1.

23. ஷை திருவேங்கடமாலை–விளக்கவுரைரூ. 1-50.

24. பலவகை விமர்ச நூல்களும் விவாத நூல்களுமான சிறுநூல்கள் நூறு ரூ. 10.

25. சங்கத் தமிழ் மாலை முப்பது ரூ. 1

26 திருப்பாவை ஜீயர் 0—50

27 வேதாந்த தேசிக வைபவம் ரூ 1

28 திருவல்லிக்கேணி யுபந்யாஸ மாலை ரூ 2

29 பகவத் கீதா ஸர்வஸ்வம் ரூ 1

30 மதுரோபந்யாஸமாலை, 11 உபந்யாஸங்கள் கொண்டது ரூ 1

31 ஸ்ரீதேசிக ஸஹஸ்ரநாம விமர்சம், விமர்சபரீக்ஷா விமர்சநம் (அல்லது) ஸ்ரீரங்கநாத பாதுகா ஸமீக்ஷா ரூ. 1

32 அற்புதோபந்யாஸமாலை (14 உபந்யா.) ரூ. 1

33 அர்ச்சாவதார வைபவம் ஸ்ரீமஹாவிஷ்ணு ஸாம்ராஜ்யம் ரூ 1

34 த்ரமிடாத்ரேய தர்சந விமர்சம் ரூ 1

35 தமிழ்ரவப் பாடத் திருத்த மறுப்பு முதலியன 0-50

36 கூரத்தாழ்வானும் சோழராஜனும் 0–50

37 கலியனும் கண்ணனும். ஸ்வாபதேச பரமார்த்தம். ஸ்வாபதேச ஆவச்யகதை. கோதை தமிழ்ச்சுவையமுதம். ஸாரார்த்த ஸங்க்ரஹம் ஆக பஞ்சாமிருதமானவை 1 ரூ

38 சிங்கப்பெருமான் திருவாக்கு வெற்றி த்ரைபதீ ப்ரபத்தி முதலான பல விஷயங்களின் மிக விரிவான விளக்கம் ரூ 1 ஷை பிற்பகுதி ரூ 1

39 ஸ்ரீவேங்கடார்ய சதகம் 116 சுலோகங்கள் உரையுடன் ரூ 1

40 பிரபந்த ஸார தத்வ ஸாரம் ரூ 1

41 சாடு ச்லோக சதகம் உரையுடன் ரூ 1

42 ஸ்ரீக்ருஷ்ண குணசேஷ்டிதாநுபவம் ரூ 1

43 அபூர்வ ராமாயணம் இராமனுடைய பதினாறு குணவிவரணம் ரூ 1–8

44 மணவாள மாமுனிகளின் வாத்ஸல்ய நிரூபணம் அணா 6

45 பட்டர் ஆழ்வான் ஆளவந்தார் ஸ்ரீஸூக்தி பரிஷ்காரம் அணா 8

46 நித்யாநுஷ்டான பத்ததி அணா 6

47 உபந்யாஸத்ரயம் அணா 10

48 வைதிக லௌகிக மஹநீய மீண்டவி 100 பெரியார்களின் திருவுருவப் படங்கள் கொண்டது ரூ 1.

# ஸ்ரீராமாநுஜன் 170.

சென்னை ஸத்க்ரந்தப்ரகாசன ஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: ஸ்ரீ காஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 15 | 1963ஷு பிப்ரவரிமீ<br>சுபக்ருத்ஷு மாசிமீ | ஸஞ்சிகை 2 |
|---|---|---|


## திருவாய்மொழி நூற்றந்தாதி-59.

நீராகிக் கேட்டவர்கள் நெஞ்சழிய * மாலுக்கும்
ஏரார் விசும்பி லிருப்பரிதா—* ஆராத
காதலுடன் கூப்பிட்ட காரிமாறன் சொல்லை *
ஓதிடவே யுய்யு முலகு.

| | | | |
|---|---|---|---|
| கேட்டவர்கள் | —(தம்முடைய ஆர்த்தநாதத்தைக்) கேட்டவர்கள் | ஆராத காதலுடன் | —பரிபூர்ணமான ஆசையோடு |
| நீர் ஆகி நெஞ்சு அழிய | } நீராய்க் கரைந்து நெஞ்சு சிதில மாகும்படியும் | கூப்பிட்ட | —அவனைக் கூவி யழைத்த |
| மாலுக்கும் | —ஸர்வேச்வரனுக்கும் | காரி மாறன் | —நம்மாழ்வாருடைய |
| ஏர் ஆர் விசும்பில் | —செல்வம் மிகுந்த பரமபதத்திலே | சொல்லை | —அருளிச் செயலை |
| இருப்பு அரிது ஆ | —எழுந்தருளியிருத்தல் அஸாத்ய மாம்படியாகவும் | ஓதிடவே | —ஓதின அளவிலே |
| | | உலகு உய்யும் | —உலகம் உஜ்ஜீவிக்கும். |

* கேட்டவர்கள் நெஞ்சுருகிக் கரையும்படியாகவும் எம்பெருமானுங் கூடத் திருநாட்டில் தரித்திருக்க முடியாதபடியாகவும் பெருமிடறு செய்து * நீராய் நிலனாய்ப் பதிகத்தில் கூப்பிட்டழைத்த ஆழ்வாருடைய திவ்யஸூக்தியை அதிகரிக்கவே உலகம் உஜ்ஜீவித்ததாகும் என்பது தேர்ந்த கருத்து. * பொன்னுலகாளீரோ * என்கிற கீழ்த் திருவாய்மொழியில் சில பறவைகளை நோக்கித் தூது செல்லும்படி வேண்டினர்; மரங்களும் இரங்கும் வகை மணிவண்ணவோ வென்று கூவுமால் * என்றபடியே ஆழ்வாருடைய ஆர்த்த த்வனிக்கு அசேதனங்களான மரங்களு மிரங்குமென்றால் சிறிது சைதன்யமுடைய பக்ஷிகள் இரங்கச் சொல்ல வேணுமோ? (இரங்குவதாவது நெஞ்சு அழிகை.) அவை அவ்விடத்திலேயே நெஞ்சழிந்து தூது செல்ல மாட்டாமே கிடந்தன. "அந்தோ! ஆழ்வாரை இப்படியும் துடிக்க விட்டானே எம்பெருமான்!" என்று நைந்து கிடந்தன. * ஊற்றின் கண் நுண் மணல் போலுருகா நிற்பர் நீராயே * என்று கீழ்த் திருவாய்மொழிக்குக் கூறின பல ச்ருதி முந்துற முன்னம் அந்தப் பறவைகளினிடத்தே பலித்ததாயிற்று. இனி என் செய்வதென்று பார்த்தா ராழ்வார்; நம் கையில் ப்ரஹ்மாஸ்த்ர மிருக்கப் பிறரிடத்தே பல் காட்ட வேணுமோ நாம்! என்று நினைத்தார்; அதாவது—அவன் எழுந்தருளியிருக்கிற பரமபதத்தளவும் சென்று கேட்கும்படியாகக் கூப்பிடுவோம்; அவன் சேதனனன்றோ; அதிலும் பரமசேதனனன்றோ; நாம் பெருமிடறு செய்து கூப்பிடும் ஆர்த்த த்வனியைக் கேட்டுங் கூடவா வந்து உதவாமற்

போவன் என்று நினைத்து. தம்மிடற்றோசையையிட்டு அழைத்துக் கொள்ளப் பார்க்கிறார்; கலங்காப் பெருநகரமான ஸ்ரீவைகுண்டத்திலும் அவன் தரித்திருக்க மாட்டாது கால் குலைந்து வரும்படி பெருமிடறு செய்து கூப்பிடுகிறார் இத்திருவாய்மொழியில்.

தூது போவார்க்குக் காலாலே யாதல் சிறகாலேயாதல் போகவேண்டுகையாலே தடையுண்டு; இவருடைய மிடற்றோசைக்கொரு தடையுமில்லையே; * உள்ளெலா முருகிக் குரல் தழுத் தொழிந்தேன் * என்னும்படியான அவஸ்தையிலும் ஒரு அபிநிவேச விசேஷத்தாலே உரக்கக் கூப்பிடுகிறார். இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்திகள் காண்மின்;—"பிராட்டி சிறையிருந்தது பாராநுக்ரஹத்தாலே யானாற்போலே இவருடைய வ்யஸனமும் பராநுக்ரஹத்துக்கு உடலாயிருக்கிறபடி. அவள் சிறையிருந்தபடியை ஸ்ரீவால்மீகி பகவான் எழுதி வைத்து இன்று நாடெல்லாம் வாழ்கிறாப்போலே, அன்று இவர் தாம் வ்யஸனப்பட்டாரேயாகிலும் இவர் அருளிச் செய்த பிரபந்தங்கள் லோகத்துக்குத் தண்ணீர்ப் பந்தலாயிற்றது. திருக்குழலோசையாலே திருவாய்ப்பாடியிற் பெண்களெல்லாம் பட்டதைத் தம்மிடற்றோசையாலே அவன் படும்படி பண்ணுகிறார்." என்று. ஆறாயிரப்படி அவதாரிகை:—"இப்படி தூத ப்ரேஷணம் பண்ணியும் எம்பெருமான் வரக் காணாமையாலே அவனைத் தம்முடைய பெரிய ஆர்த்தியோடே கூடத் திருநாட்டிலே கேட்குமபடி கூப்பிட்டழைக்கிறார்." என்று. உண்மையில் இத்திருவாய்மொழிக்கு "நீராகிக் கேட்டவர்கள் நெஞ்சழிய, மாலுக்கும் ஏரார் விசும்பில் இருப்பரிதா—ஆராத காதலுடன் கூப்பிட்ட" என்றிங்ஙனே பாசுரமிட்டது பேரின்ப வெள்ளம். ... ... ... (59).

# ஆங்கிலத்தில் அபூர்வ ராமாயணம்.

சில பல வருடங்களுக்கு முன்பு அபூர்வ ராமாயணம் என்றொரு தமிழ் நூலை நாம் இயற்றியிருக்கிறோமென்பது பெரும்பாலும் யாவரு மறிந்ததே. ஸ்ரீராமாயணத் தொடக்கத்தில் நாரத மஹர்ஷியை நோக்கி வான்மீகி முனிவர் பதினாறு திருக்குணங்களை யெடுத்துக் கூறி இவற்றையுடைய ஒரு மஹா புருஷனைச் சொல்லவேணுமென்றன்றோ கேட்டிருக்கிறார். அப்பதினாறு திருக்குணங்களையும் ஸ்ரீராமாயண கதைகளைக் கொண்டு இராமபிரானிடத்திலே விரிவாக நிரூபித்துக் காட்டியிருப்பது நம்முடைய அபூர்வ ராமாயணம். இதை நாம் தெலுங்கு பாஷையிலுமெழுதி நமது தெலுங்கு மாஸிக பத்ரிகையிலும் அச்சிட்டிருக்கிறோம்; ஸம்ஸ்க்ருத பாஷையிலெழுதி ஸம்ஸ்க்ருத மாஸிக பத்ரிகையிலும் அச்சிட்டிருக்கிறோம்.

இஃது ஆங்கில பாஷையிலும் வெளிவர வேண்டுமென்று (Gwaliar) குவாலியர் நகரத்தில் வாழும் ஸ்ரீ. உ. வே S. ஸத்யமூர்த்தி ஐயங்கார் ஸ்வாமிக்குத் தோன்றி அவர் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து நமக்கனுப்பினர். அவருடைய ஸம்பிரதாய ஞானவிசேஷத்தையும் தமிழ்ப் புலமையையும் நாம் நன்கு அறிவோம். அவரது ஆங்கிலப் புலமையைப் பற்றி நாம் நேராக அறியகில்லோமாயினும் அறிஞர் பலர் வாயிலாகக் கேட்டறிந்திருக்கிறோம். 'இது மொழிபெயர்ப்பு' என்று தெரிந்து கொள்ள இயலாதவகையில் ஸ்வதந்திரக்ரந்தம் போலவே எழுத வல்லவர் என்றும் அவ்விதமாகவே எழுதியுள்ளாரென்றும் ஆப்தர்கள் உகந்து வியந்து கூறினபடியால் இதனை நாம் அச்சிடுவித்தோம். அஃது இப்போது இந்த ஸ்ரீராமாநுஜனில் சேர்க்கப்பட்டு வெளிவருகின்றது.

## ஸத்க்ரந்தப்ரகாசந ஸ்பையின் அபிமானம்.

நமது ஸ்ரீராமாநுஜனைப் பெற்று வாசிப்பவர்கள் யாவரும் ஆங்கிலம் பயின்றவர்க ளென்று சொல்ல முடியாதன்றே. நம்முடைய ஊஹத்தில் ஆங்கில மறிந்தவர்களாகக் கருதப்படுகின்றவர்களுக்கு மட்டுமே அது சேர்ந்த பத்ரிகையை அனுப்புகிறோம். நம்முடைய திரிபுண்ர்ச்சியினால் யாருக்காவது விடுபட்டிருந்தால் அவர்கள் 75 N. P. ஸ்டாம்புகள் வாங்கிக் கவரில் வைத்தனுப்பினால் அவர்களுக்கு அவ்வாங்கில நூல் அனுப்பப்படும். இது தனிப் புத்தகமாகவும் தயாராகியுள்ளது.

மற்றொன்றும் கவனிக்கவேணும். சிலவாண்டுகட்கு முன்பு நித்யாநுஷ்டான பத்ததி யென்று நித்யோபயுக்த நூல் ஒன்று வெளியிட்டிருந்தோம். அது இப்போது துர்லபமாய் விட்டது. அபேக்ஷகர்கள் மலிந்திருந்ததனால் அதனை இப்போது மறு பதிப்பு (Reprint) செய்தோம். இப்பதிப்பில் சில விசேஷங்களுண்டு (அதாவது) வைதிக மந்த்ரங்கள் சுலோகங்கள் முதலான ஸம்ஸ்க்ருத பாகங்களை முன்பு தமிழ் லிபியில் மட்டும் அச்சிட்டிருந் தோம். இப்போது தேவநாகர லிபியிலும் சேர்த்து அச்சிட்டிருக்கிறோம். மற்றும் முக்கிய மான சில விஷயங்களும் சேர்த்திருக்கிறோம். மேலே சொன்ன ஆங்கில ராமாயணம் சேர்த்த பத்ரிகைகளில் இது சேர்க்கப்படவில்லை. அது சேராத பத்ரிகைகளில் மட்டுமே இந்த நித்யாநுஷ்டான பத்ததி சேர்த்து வெளியிடப்பட்டிருக்கிறது. இதுவும் தனிப் புத்தக மாகவும் வெளியிடப்பட்டிருக்கின்றது. அபேக்ஷையுள்ளவர்கள் ஒரு ரூபா ஸ்டாம்புகள் வாங்கி யனுப்பிப் பெற்றுக்கொள்ளலாம். **க்ரந்தமாலா ஆபீஸ், சின்னகாஞ்சீபுரம்.**

## ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபையின் அபிமானம்.

நமது ஸ்ரீராமாநுஜன் ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபையின் சார்பாக வெளிவரத் தொடங் கியதென்பதை யாவரு மறிவர். அந்த ஸபை 15 வருடங்களுக்கு முன்பு சென்னையில் ஸ்தாபிதமாகிச் சில தனவான்கள் அதற்கு அங்கத்தினராகச் சேர்ந்து பல பேர்களை ஜீவியச் சந்தாதாரர்களாகவும் ஸாதாரணச் சந்தாதாரர்களாகவும் சேர்த்ததனால் அப்போது தமிழ் லிபியிலும் தெலுங்கு லிபியிலும் பூர்வாசார்ய க்ரந்த ரத்னங்கள் பலவும் பதிப்பிக்க ஸௌகரிய மேற்பட்டது. அப்போதுதான் இந்த ஸ்ரீராமாநுஜன் பத்ரிகையும் தொடங்கலாயிற்று. ஆனால் அந்த ஸபையின் காரியம் நிரந்தரமாக நடைபெற்று வரவில்லை. ச்ரத்தையுடன் ஆரம்பித்த பெரியார்கள் கால க்ரமேண ச்ரத்தை குன்றியதனால் நோக்கத்தின்படி மேன் மேலும் பூர்வாசார்ய க்ரந்தங்களை வெளியிடுவதற்கு ஸௌகரியமில்லையாயிற்று. பகவத் பாகவத கிருபையினால் இப்பத்திரிகை மட்டும் இடையறாது நடைபெற்று வருகின்றது. எனினும், அந்த ஸபைக்கும் இப்பத்திரிகைக்கும் யாதொரு ஸம்பந்தமுமில்லை. இது ஸத் க்ரந்த ப்ரகாசன ஸபையின் சார்பாக வெளிவருவதென்று ஆரம்பத்தில் பதிப்பிக்கப்பட்ட படியால் அது மாற்றப்படாம லிருக்கின்ற தத்தனை.

அந்த ஸபையைத் தொடங்கின மஹான்களில் சிலர் இப்போது மிருப்பதனால் நாம் அவர்களைக் கண்டு அந்த ஸபைக்குப் புத்துயிரளிப்பது நலமல்லவா? என்று நாம் கேட்டுக் கொண்டதன்மேல் சிறிது ஊக்கங் கொண்டிருக்கின்றார்கள். அதன் பயனாக இப்பத்திரிகை யின் சந்தாதாரர்களுக் கெல்லாம் [சந்தாத் தொகை யனுப்ப நினைப்பூட்டி] கார்டு அச்சிட்டுப் போஸ்டு செய்தார்கள். ஒரு பத்து நபர்கள் சந்தாப் பணமனுப்பினார்கள். பலர் பதிலே தெரிவிக்கவில்லை. ஏற்கெனவே அனுப்பிவிட்டோமென்று சிலர் தெரிவித்துள்ளார்கள்.

மொத்தத்தில் சந்தா பாக்கியுள்ளவர்களே அதிகமாகத் தேறுகிறார்கள். இதன்மேல் ஸபையாருடைய ஆலோசனை எவ்விதமாக முடிவு பெறுகின்றதென்பது தெரியவேணும். சந்தா செலுத்தாதவர்களுக்குப் பத்திரிகை நிறுத்தப்பட வேண்டியதாகவே முடிவாகும். ... *

ஒரு பக்தருடைய கடிதம்.

L. MADAVABALAKRISHNAN,
Junior Deputy Superintendent.

Government Press,
MADRAS–1.
23–2–63.

ஸ்ரீராமஜெயம்.

ஸ்ரீயப்பதியான பீதகவாடைப் பிரானார் பரமகுருவாய் வந்து அவதரித்துள்ள ஸ்ரீஜகதாசார்யஸிம்மாஸநாதிபதி, பிரதிவாதிபயங்கரம் மஹாவித்வான்–அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளின் திருவடித்தாமரைகளுக்குத் தண்டம் ஸமர்ப்பித்து, அடியேன் விண்ணப்பித்துக்கொள்வது என்னவென்றால், இந்த ஆண்டு மார்கழித் திங்கள் முதல்நாள் முதல் பாசுர உபந்யாஸத்தின்போது கோஷ்டியில் ஸ்வாமிகள் "32 வருட காலமாகக் காலக்ஷேபம் கேட்டுக்கொண்டு இருப்பவர்களும் இருப்பார்கள்" என்று ஸாதித்தீர்கள். அதுபோல் 32 வருடங்களாக ஸ்வாமிகளின் உபந்யாஸம் கேட்டு வருபவர்களில் அடியேனும் ஒருவன் என்பதை மகிழ்ச்சியோடு விண்ணப்பித்துக்கொள்கிறேன். திருப்பாவைக் காலக்ஷேபத்தைத் தேனும் பாலுமாக வர்ஷித்துக் கோஷ்டியைப் பேரின்ப வெள்ளத்துள் மூழ்கச்செய்து ஞானத்தை ஊட்டி வருகிறீர்கள். ஸ்வாமிகளின் காலக்ஷேபத்தைக் கேட்க ஆரம்பித்தபோது அடியேன் அரசாங்க அச்சகத்தில் ஒரு பைண்டராக மாதம் 17 ரூபாய் சம்பளம் வாங்கிக்கொண்டிருந்தேன். இப்போது எனக்கு வயது 52 ஆகிறது. ஸ்வாமிகளின் கிருபையாலும் பெருமாளின் பேரருளாலும் ஷை அச்சகத்தில் ஒரு கெஜடட் ஆபீஸர் உத்யோகத்தில் ரூ. 500-க்குமேல் வாங்கிக்கொண்டு வருகிறேன். இதோடல்லாமல், ஸ்ரீஆண்டாள் ஸாதித்திருப்பதுபோலும் ஸ்வாமிகள் அடிக்கடி ஸாதிப்பதுபோலும் "எங்கும் திருவருள் பெறுவார்" என்பது ஸத்யமாகி, எல்லா வகைகளிலும் நன்மை அடைந்து வருகிறேனடியேன் என்பதை ஸ்வாமிகளின் சன்னிதியில் சுருக்கமாகத் தெரிவித்துக்கொண்டால் என்னுடைய பக்தி விசுவாஸத்தைச் செலுத்தியதாக இருக்கும் என எண்ணிக்கொண்டு இதை எழுதினேன். ஸ்வாமிகளுக்கு இத்தகைய கடிதத்தை வாசிப்பதற்கு சிரமம் கொடுத்ததற்காக மன்னிக்கும்படி மன்றாடிக் கேட்டுக்கொண்டு என்னுடைய சாஷ்டாங்க நமஸ்காரங்களையும் தெரிவித்துக்கொள்ளுகிறேன். ஸ்வாமிகள் பல்லாண்டு காலம் வாழவேண்டுமென்று அடியேன் ஸ்ரீமந்நாராயணனைப் பிரார்த்திக்கிறேன்.

இப்படிக்கு அடியேன்,
மாதவபாலகிருஷ்ணன்.

---

சென்ற இதழில் திருநாராயணபுரச் செய்தி வெளியிட்டபோதே திருவுருவப்படம் வெளியிட்டிருக்கவேண்டும். அப்போது ப்ளாக்கு கைதவறியிருந்தபடியால் புநஸ்ஸம்ஸ்கரணம் செய்ய நேர்ந்து இவ்விதழில் அடுத்த பக்கத்தில் வெளியிடப்படுகிறது.



ஸ்ரீஉவே, சதுச்சாஸ்திரவித்வான்
மண்டயம் அனந்தாண்பிள்ளை. அனந்தாழ்வார்ஸ்வாமி
(வைகுண்டவாஸி) (வேதாந்த வாதாவளீகாரர்)

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# நல்வார்த்தை நானூறு.

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் எழுதியது.

## முன்னுரை.

நம்முடைய ஸம்பிரதாயத்தில் வார்த்தாமாலை யென்றொரு சிறந்த திவ்ய க்ரந்தமுண்டு. அது,நம்பிள்ளை காலத்தில் திருவவதரித்ததென்று பிரஸித்தம். அந்த மஹா க்ரந்தம் பூருவாசாரியர்களால் சுருக்கமாகவாவது வியாக்கியானிக்கப் பட்டிருந்தால் இக்காலத்தவர்களுக்குப் பெரிதும் பயன்படும். வியாக்கியானம் செய்யப் பெறாததோடு அச்சுப் பிழைகளும் மலிந்திருப்பதனாலும், பஹுஜ்ஞர்களின் உபதேசங் கொண்டல்லது அறியவொண்ணாத ஆழ்பொருள்கள் பலபல நிரம்பியிருப்பதனாலும் அஃது இக்காலத்தவர்களுக்குப் பயன்படாததாயிருக்கின்றது. அந்த ஸ்ரீகோசம் வெகுகாலத்திற்கு முன்பு தமிழ் லிபியிலும் தெலுங்கு லிபியிலும் அச்சிடப்பட்டிருந்தும் இக்காலத்தவர்களுக்கு மிகவும் துர்லபமாய் விட்டது. வெகு பரிச்ரமப்பட்டும் நமக்கும் ஒரு பிரதி கிடைக்கவில்லை. அக்குறை தீர நல்வார்த்தை நானூறு என்னு மிச்சிறுநூல் எழுதப்படுகின்றது. இதற்கு மூலம் நம்முடைய பூருவாசாரியர்களின் திவ்ய ப்ரபந்த வியாக்கியானங்கள் ரஹஸ்ய வியாக்கியானங்கள் ஸ்ரீ பாஷ்ய கீதா பாஷ்யங்கள் முதலியனவாகும். முன்வார்த்தைக்கும் பின்வார்த்தைக்கும் தொடர்புநிர்ப்பந்தமின்றிக்கே பெரும்பாலும் ஒவ்வொரு வார்த்தையும் தனித் தனிப் பொருளமைந்து நிற்கும். உபந்யாஸகர்களுக்கு இடையிடையே கூட்டிக்கொண்டு ஸபாரஞ்ஜனம் செய்வதற்கு மிகவும் பாங்காயிருக்குமென்னு மெண்ணங் கொண்டே இந்நூல் தொகுக்கப்படுகின்றது. வேதார்த்தங்கள் இதிஹாஸ புராணார்த்தங்கள் ஸ்ரீபாஞ்சராத்ர விஷயங்கள் தரும சாஸ்த்ரார்த்தங்கள் காவ்ய நாடகாலங்கார சித்திரங்கள் இலக்கண விலக்கிய வின்பங்கள் வைதிக லௌகிக கதைகள் என்றித்தகைய எல்லாவற்றையும் சேர்த்துத் தொகுக்க வாசைகொண்டே இஃது எழுதப்படுகின்றது. இதற்கு நானூறு என்றொரு ஸங்கியாநியமம் கொள்ளவேண்டிய அவசியமில்லையானாலும் ஒரு முடிவு வேண்டிக் கொள்ளப்பட்டது. மேன்மேலும் தொடர்ந்தே செல்லும்.

## முன்னுரை முற்றிற்று.

1. முதல் வார்த்தை. வார்த்தா என்பது வடசொல். "வார்த்தா ப்ரவ்ருத்திர் வ்ருத்தாந்த:" என்ற அமரகோசத்தின்படி விருத்தாந்தத்திற்கு வார்த்தை யென்று பெயர். ஆனாலும் முன்னோர்களின் திவ்ய க்ரந்தங்களில் "பிள்ளா னருளிச் செய்யும் வார்த்தை; ஜீயரருளிச் செய்யும் வார்த்தை; பிள்ளை பணிக்கும் வார்த்தை" என்று அடிக்கடி வருதலால் துணுக்கையான ஸ்ரீஸூக்திக்கும் வார்த்தையென்று பெயருண்டு. 'அவனோடு நான் வார்த்தை சொல்லுவதில்லை, என்னோடு அவன் வார்த்தை சொல்லுவதில்லை' என வருமிடங்களில் வார்த்தை யென்பதற்குப் பேச்சு என்றே பொருள். நாச்சியார் திருமொழியில் 'செம்மையுடைய திருவரங்கர் தாம் பணித்த மெய்ம்மைப் பெருவார்த்தை விட்டுசித்தர்

கேட்டிருப்பர்" என்னும் பாசுரத்தில் வார்த்தையென்பது பொதுப்பட ஸ்ரீஸூக்திக்கு வாசகமாக நின்றது. சிறுசிறுவிஷய விந்யாஸம் இங்கு வார்த்தையாகக் கொள்ளப்பட்டது. (1)

2. "भ्रातः पान्थ ! कुतो भवान् ? नगरतः, वार्ता न वा ? विद्यते, बाढं ब्रूहि, युवा पयोद समये त्यक्त्वा प्रियां निर्गतः । किं सा जीवति ? जीवतीति कथिता वार्ता मयाऽपि श्रुता, भूरेषा विपुला जनश्च विविधः किं किं न संभाव्यते ? ॥" இது குவலயானந்தத்தில் மேற்கோளாகக் கொடுக்கப்பட்ட சுலோகமொன்று. இருவர் ஸம்பாஷணையாக இது அமைக்கப்பட்டது. ஒருவன் சென்னையிலிருந்து செங்கற்பட்டு போகிறான்; எதிரே யொருவன் வருகிறான். அவன் இவனை நோக்கிக் கேட்கிறான் [ப்ராத:! பாந்த! குதோ பவாந்?] அண்ணே! எங்கிருந்து வருகிறாய்? [நகரத:] சென்னையிலிருந்து வருகிறேன். [வார்த்தா நவா?] நகரத்துச் செய்தி ஒன்றுமில்லையா? [வித்யதே.] ஏனில்லை, உண்டு. [பாடம் ப்ரூஹி] அப்படியானால் சொல்லு கேட்போம். [யுவா பயோதஸமயே ப்ரியாம் த்யக்த்வா நிர்க்கத:] யுவாவானவொருவன் மழை காலத்தில் மனைவியை விட்டிட்டு வெளிநாடேறச் சென்றனன். [கிம் ஸா ஜீவதி?] அப்படியா? அந்த மனைவி உயிருட னிருக்கிறாளோ? [ஜீவதீதி கதிதா வார்த்தா மயாபி ச்ருதா] நானென்ன பார்த்தேனா என்ன? பிழைத்திருக்கிறா ளென்கிற பேச்சு என் காதிலும் விழுந்தது. [பூரேஷா விபுலா ஜநச் ச விவித: கிம் கிம் ந ஸம்பாவ்யதே?] பூமண்டலமோ விசாலமானது; ஜனங்களின் இயல்போ வெவ்வேறு வகையானது. எதுதான் ஸம்பவிக்க மாட்டாது. மழை காலத்தில யுவாவானவன் வெளியிற் போவதென்பது அஸம்பாவிதம்; அதிலும் காதலியை விட்டுத் தனியே போவதென்பது பின்னையும் அஸம்பாவிதம், பிரிந்த துணைவி பிழைத்திருக்கிறாளென்பது ஸர்வாத்மநா அஸம்பாவிதம் என்பது இந்த ஸம்பாஷணையிலிருந்து தேறினது. (2)

3. திருமங்கையாழ்வார் எம்பெருமானைப் பிரிந்து தாம் கிலேசப்படுவதைப் பெண் பாவனையிற் பேசுகின்றார். பரகாலரான நிலைமை தவிர்ந்து பரகால நாயகியான நிலைமையேற்றுத் திருக்கண்ணபுரத்துச் சௌரிப் பெருமாள் திறத்துப் பிரிவாற்றாமையைப் பேசும் பதிகமான * தந்தை காலில் விலங்கற * என்னும் திருமொழியில் (பா - 8.) "ஒழுகு நுண் பனிக் கொடுங்கிய பேடையை அடங்க அஞ்சிறை கோலித் தழுவு நள்ளிருள் தனிமையில் கடியதோர் கொடுவினை யறியேனே." என்பது மிகவுருக்கமான பாசுரம். பறவைக் கூட்டங்களும் குளிர்க்கு அஞ்சி ஒடுங்கிக் கிடக்கும் பேடையைச் சிறகினால் அணைத்து ஒன்றிக் கிடக்கும்படியான நள்ளிருட் போதிலே நாயகனைப் பிரிந்து பரிதபியா நின்ற என்னைப் போலே பாவஞ் செய்தாரும் உலகிலுளரோ? எனப்படுகிறது. பனி காலத்தில் தலைவனைப் பிரிந்து தனிக் கிடை கிடப்பதற்கு மேற்பட்ட பாவமில்லை யென்றவாறு. ... (3)

4. குரரி யென்பது ஒரு பறவை. இது க்ரௌஞ்சமென்றும் வழங்கப்பெறும். தமிழில் இது அன்றில் எனப்படும். இது பெரும்பாலும் அழுதுகொண்டே யிருக்குமாதலால் அழுகுர லன்றில் என்றும் சொல்லப்படுவதுண்டு. இப்பறவை பெரும்பாலும் பனைமரத்தில் வாழும். எப்பொழுதும் ஆணும் பெண்ணும் இணைபிரியா திருக்கும். கணப்பொழுது ஒன்றை ஒன்று விட்டுப் பிரிந்தாலும் அத்துயரத்தைப் பொறாமல் ஒன்றை யொன்று இரண்டு மூன்றுதரம் கத்திக் கூவி, அதன் பின்பும் தன் துணையைக் கூடாவிடின் உடனே இறந்து விடும். ஆழ்வார்களின் திவ்ய ஸூக்திகளில் அன்றிலைப் பற்றின ப்ரஸ்தாவம் அடிக்கடி வரும். காமோத்தீபக வஸ்துக்களில் இதுவும் ஒன்றாகப் பரிகணிக்கப்படுகின்றது. (4)

5. திருநறையூரென்னும் திவ்யதேசத்திற்கு நாச்சியார் கோயிலென்னுந் திருநாமமே மிகப் பிரசித்தமாக வழங்கி வருகின்றது. இத்தலத் தெம்பெருமான் விபவ மூர்த்தியாகி விவாஹாபேக்ஷையுடன் பெண் கேட்கச் சென்றவிடத்தில் பெண்ணின் தந்தை தாயர் 'எங்கள் பெண்பிள்ளை மிக்க சீருஞ் சிறப்புமாக வளர்கின்றவள்; இவள் ஸ்வாதந்திரியம் குன்றுமே மஹாவைபவம் பொலிய வாழ்ச்சி நடத்துமாறு சபதம் செய்து கொடுத்தீராகில் உமக்கு இவளைத் தாரை வார்த்துத் தருவோம்' என்றனராக, பெண் கேட்ட பெருமான் அப்படியே இசைந்து சபதம் செய்து கொடுத்து மணம் புணர்ந்து கொணர்ந்து, இவளுடைய பெயராலேயே தன்னூர்க்கு வ்யபதேசமிட்டு (அதாவது) 'நாச்சியார் கோயில்' என்றே பெயராக்கி, திருவீதிப் புறப்பாடுகளில் நாச்சியார் முன்னே யெழுந்தருளவும் நம்பி பின்னே யெழுந்தருளவுமான வொரு ஸம்பிரதாயம் நாளைக்கும் நிகழ்ந்து வருகின்றது. ... (5)

6. பெரியதிருமொழியில் திருநறையூர்ப்பாடலில் (6–7–6) * பள்ளிகமலத்திடைப் பட்ட பகுவாயலவன்முகநோக்கி, நள்ளியூடும் வயல் சூழ்ந்த நறையூர்'' என்றுள்ளது. அலவன் என்று ஆண் நண்டுக்கும், நள்ளி யென்று பெண் நண்டுக்கும் பெயர். ஆண் நண்டானது தாமரை மலரிலே சென்று சிறைப்பட்டிருந்து வந்து சேர்ந்ததாகவும், அதனிடத்திலே பெண் நண்டு பிரணயரோஷம் காட்டுவதாகவும் வயல் நிகழ்ச்சி இங்குக் காட்டப்பட்டுள்ளது. இதன் கருத்து விளங்கவில்லை. இதை பட்டர் விவரித்துரைத்த விதம் கேண்மின்;— ஓர் ஆம்பல் மலரிலே நண்டு தம்பதிகள் இனிது வாழ்கையில் பேடை கருக்கொண்டது (கர்ப்பிணியாயிற்று); அப்பேடைக்கு இனியபொருளைக் கொணர்ந்து தரவேணுமென்று ஆசையுண்டாயிற்று. ஆம்பல் மலரில் தேன் கிடையாது; அஃது உள்ளது தாமரைமலரிலாதலால், அங்கிருந்து கொணர்ந்துகொடுப்போமென்றெண்ணிப் புறப்பட்டு மெல்லமெல்ல நகர்ந்து தாமரைப்பூவிலே சேர்ந்தது. அவ்வளவிலே கதிரவன் அஸ்தமிக்கவே தாமரை மலர் மூடிக்கொள்ள அதனுள்ளே அகப்பட்டது அந்த நண்டு. தாமரையை மலர்த்திக்கொண்டு எப்படியாவது வெளிக்கிளம்பிவிடவேணுமென்று எவ்வளவோ முயன்றவளவிலும் ஸூர்யோதயமானாலல்லது தாமரை மலராதாயிற்று. உடம்பைக்கொண்டு புரண்டு இரவெல்லாம் அதிலே தங்கியிருந்து பொழுது விடிந்தவாறே மலர்ந்த அம்மலரினின்று வெளிப்பட்டு, தாதும் சுண்ணமும் உடம்பிலே நிழலிட்டுத் தோற்றத் தன்னிடமான ஆம்பலுக்கு விரைந்து வந்து சேர்ந்தது. ஆம்பல் மலரானது பகற்போதில் மூடிக்கொள்ளுமே; ஆண் நண்டு அங்கு வந்து சேரும் ஸமயமும் பெண்நண்டுகிடக்கும் ஆம்பல் மலர் மூடிக்கொள்ளும் ஸமயமும் ஒன்றாயிருந்தது. இதைப் பார்த்தால், ஆண் இரவில் வேறிடத்துத் தங்கிவந்தபடியாலும் உடம்பில் சுவடு இருந்தபடியாலும் பிரணய ரோஷங்கொண்டு கதவையடைத்துக்கொண்டது போலும்! என்னலாம்படியிருந்ததாம். ஒருபுறத்தில் மலர்ந்த தாமரைகளும், மற்றொரு பக்கத்தில் மலராத ஆம்பல்களும் விளங்கப்பெற்றவயலால் சூழப்பட்டது திருநறையூர் என்றதாகச் சேறுகிறது. இதை நேர்கொடுநேரே சொல்லாமல் அலவனுக்கும் நள்ளிக்கும் ஊடல் நடப்பதாகச் சொன்னது கவி சமத்காரம். இதை மருமமறிந்து விவரித்தது பட்டருடைய அத்விதீயமேதாவிலாஸம். இங்ஙனே பட்டர் பொருளருளிச் செய்தபோது கேட்டிருந்த பிள்ளை திருநறையூரரையர் 'பெண் நண்டு கதவடைத்துத் தண்டனை செய்தது ஏதோ குற்றம் நினைத்தல்லவா? விசாரணை செய்தல்லவோ குற்றத்தை நிச்சயிக்கவேணும்; விசாரணை செய்யாமலே தண்டித்துவிடலாமோ?' என்று கேட்டாராம். அதற்கு பட்டர் ரஸகனமாக விடையிறுத்தாராம்—'வாஸ்தவந்தான்; நாம் என்செய்வது? கேள்வியில்லாதபடி பெண்

ணரசு நாடாயிற்றே!' என்றாராம். பெண்ணரசுநாடு என்றதன் மருமத்தை கீழ் ஐந்தாவது வார்த்தையினால் விளங்கவறிக. ... ..... ... ... (6)

7. ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் அத்தாணிச் சேவகம் என்பது ஓர் சிறந்த வார்த்தை. இப்பிரயோகம் பெரியாழ்வார் திருவாக்கில் தோன்றியது. திருப்பல்லாண்டில "நெய்யிடை நல்லதோர் சோறும் நியதமும் அத்தாணிச் சேவகமும்" என்றதும், பெரியாழ்வார் திருமொழியில் "அண்டத் தமரர்கள் சூழ அத்தாணி யுள்ளங் கிருந்தாய்" என்றதும் காணத்தக்கன. ஆஸ்தானம் என்னும் வடசொல் அத்தாணியென விகாரப்பட்டது. அத்தாணிச் சேவகமாவது ஆஸ்தான ஸேவகம். எம்பெருமா னெழுந்தருளி யிருக்குமிடங்கள் தோறும் தவறாது உடனிருந்து தொண்டாற்றுகை யென்க. .... .... (7)

8. சாமானியர்கள் தாம்பூலம் என வழங்குவதை ஸ்ரீவைஷ்ணவப் பெரியார்கள் அடைக்காய் என வழங்குவர். திருப்பல்லாண்டில் "கையடைக்காயும்" என்றதும், பெரியாழ்வார் திருமொழியில் "ஆய்ப்பாலர் பெண்டுகளெல்லாரும் வந்தார் அடைக்காய் திருத்தி நான் வைத்தேன்" என்றதும் காணத்தக்கன. அடை என்று இலைக்குப் பெயர்; வெற்றிலையென்றவாறு; காய் என்று பாக்கைச் சொன்னபடி. ஆக அடைக்காய் என்றது வெற்றிலை பாக்கு என்றதாயிற்று. ... .... .... (8)

9. முற்காலத்தில் அம்மங்கியம்மாள் என்னும் ஓராசிரியர் நோயால் வருந்தியிருக்க, நஞ்சீயரும் நம்பிள்ளையும் அவரைக் கண்டு விசாரிக்க எழுந்தருளியிருந்தனர். அப்போது அவர் மிகவும் கிலேசப்படுவதைக் கண்டு நஞ்சீயர் 'ஸ்வாமிந்! தேவரீர் ஸாமாந்ய மநுஷ்யரன்றே; எவ்வளவோ பகவத் பாகவத கைங்கரியங்கள் பண்ணியிருக்கிறீரே; குணநுபவத்தாலல்லது போதுபோக்கி யறியீர்; இப்படிப்பட்ட வும்மையும் எம்பெருமான் மற்றவர்களைப் போலே இப்படி கஷ்டப்படுத்துகின்றானே!' என்றாராம். அதற்கு அவர் "நீயாளவளையாள மாட்டோமே * என்றன்றோ கலியன் பாசுரம்; எம்பெருமானுக்கு வாழ்க்கைப்பட்டால் கிலேசப்பட்டுத்தானே யிருக்கவேண்டும்" என்றாராம். பிறகு வெளியில் எழுந்தருளும்போது நஞ்சீயர் நம்பிள்ளையை நோக்கி "பார்த்தீரா இவருடைய அத்யவஸாயத்தை! அஸஹ்யமான கிலேச தசையிலும் என்ன தெளிவு பார்த்தீரா? என்ன பாசுரமெடுத்துக் காட்டினார்!' என்றருளிச் செய்து மகிழ்ந்தாராம். பெரிய திருமொழி மூலத்தில் (3—6—9) "நீயாள வளையாள மாட்டோமே" என்றுள்ளது. உண்மையில் இச்சந்தையின் கருத்தைச் செவ்வனே தெரிந்துகொள்வது சிரமம். எம்பெருமானுக்கு வாழ்க்கைப்படுவதென்றால் கிலேசப்படுகை தான்; கிலேசப்படாதிருக்க வேணுமானால் எம்பெருமான் திறத்தில் ஈடுபடலாகாது. என்னுமிடம் பெறுவிக்கப்படுகிறது. பாகவதர்களுக்கு உண்டாகும் நோய் பகவத் விச்லேஷ ப்ரயுக்தமே யல்லது மற்றைப்படியான சாதுர்த்திகமன்று என்பதும் தெரிவித்தபடி. (9)

10. "பிரியேன், பிரியில் தரியேன்" என்பது அன்பின் பரீவாஹமான பேச்சுக்களில் தலையானது. காதலன் காதலியை நோக்கித் தன் பிரேமத்தை யெல்லாம் வெளியிட்டுக் கொண்டு சொல்லுகையில் 'பிரியேன், பிரியில் தரியேன்' என்பனும். அதாவது, 'காதலி! உன்னைவிட்டுப் பிரியவே மாட்டேன்; ஒருகால் விதிவசத்தால் பிரிய நேர்ந்தால் ஒரு கணப் பொழுதும் தரிக்கமாட்டேன்' என்றவாறு. இப்படி அடிக்கடி சொல்லிக் கொண்டிருப்பன். இப்படி யிருக்கையில் ஒருநாள் அவள் இறந்தொழிந்தாள். அப்போது இவன் செய்யவேண்

டியதென்ன? * பிரியில் தரியேனென்று சொல்லிக் கொண்டிருந்ததற்குச் சேர உடனே தானும் இறந்தொழிய வேணும். தன்னை யறியாமலே பிராணன் படுக்கென்று போகவேணும். போகவில்லை. விக்கி விக்கி யழுகிறானிவன். ஆகாயத்தை நோக்கி யழுகிறான். நிலத்தில் புரண்டுருண்டழுகிறான். ஓயாம லழுகிறான். பார்ப்பவர்கள் 'அப்பப்ப! என்ன அன்பு! என்ன அன்பு!!' என்று மாய்கிறார்கள். உண்மை யறிந்த வொரு பண்டிதன் பகர்கின்றான்—"यदि प्रियावियोगेऽपि रुद्यते बलवत्तरम् । तदिदं दग्धमरणमुपयोगं क्व यास्यति ॥—யதி ப்ரியா வியோகேபி ருத்யதே பலவத்தரம், ததிதம் தக்தமரணம் உபயோகம் க்வ யாஸ்யதி?" என்றான். அப்பா! பரிஹாரமற்ற இவ்வாபத்திலும் நீ அழுது கொண்டு கிடந்தாயாகில், இத்தகைய ஆபத்துக்கென்று அருமருந்தாக ஏற்பட்டிருக்கிற பாழும் மரணம் வேறு எப்போதுதான் உபயோகப்படப்போகிறது? என்று கேட்டானாயிற்று. இத்தால் ஏற்படுவதென்ன? அழுவதென்பது தேஹத்திற்கு அபாயம் நேராதபடி தரித்துக்கொள்வதற்கான ஓர் உபாயமேயொழிய "பிரியில் தரியேன்" என்றதற்குச் சேர்ந்த காரியமன்று என்பதாம். ... (10)

11. வெஃகா என்று திவ்யப்பிரபந்தங்களில் பாடப்படுகின்ற தலம் ஸ்ரீயதோக்தகாரி ஸன்னிதி. தேவப்பெருமாள் ஸன்னிதிக்கு அணித்தானதிது. நான்முகன்செய்த யாகத்திற்குக் காரணவிசேஷத்தினால் இடையூறு செய்யவந்து வேகவதிநதியாகப் பெருகின ஸரஸ்வதியின் செருக்கடங்க எம்பெருமான் அணையாகப்பள்ளிகொண்ட தலம் இது. இந்த ஸன்னிதியின் பக்கத்திலுள்ள தாமரைத்தடாகத்தில் பொய்கையாழ்வார் * வனச மலர்க்கருவதனில் வந்துதித்தார். திருமழிசையாழ்வார் இத்தலத்தில் வெகுநாள் எழுந்தருளியிருந்து இப்பெருமானுடைய ஸௌலப்ய ஸௌசீல்யங்களை உலகமறியச்செய்த இதிஹாஸம் அறியத்தக்கது. அது காரணமாகவே இப்பெருமானுக்கு வடமொழியில் 'யதோக்தகாரி' என்றும், தென்மொழியில் 'சொன்னவண்ணஞ்செய்த பெருமாள்' என்றும் திருநாமம் ப்ரஸித்தமாயிற்று. பொய்கையாழ்வார் பேயாழ்வார் திருமழிசையாழ்வார் நம்மாழ்வார் திருமங்கையாழ்வார் ஆகிய ஐவர் மங்களாசாஸனம் செய்த தலமிது. ... ... (11)

12. நம் பூர்வாசார்ய பரம்பரையானது மணவாளமாமுனிகளளவிலே முற்றுப்புள்ளி யிடப்பெற்றிருக்கின்றது. இவரருளிச்செய்த திவ்யஸூக்திகளினாலேயே பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளுக்கெல்லாம் பெருமையுண்டாயிற்றென்பது எள்ளளவும் அதிசயோக்தியன்று. ஏற்கெனவே அவதரித்துள்ள பூர்வாசார்ய திவ்யஸூக்திகளை ப்ரவசனம் செய்தருள்வதிலேயே மிகுந்த அபிநிவேசமுடையரான மாமுனிகள் ஸ்வதந்த்ரமாகச் சில க்ரந்தங்கள் இட்டருளத் திருவுள்ளமுடையவரல்லரேயானாலும், இவ்வுலகின் பாக்யபரிபாகத்தாலும் சிஷ்யர்களின் பிரார்த்தனைக் கிணங்கியும் பகவந் நியமனத்தை முன்னிட்டும் * தேனே பாலே கன்னலே யமுதேயான பல திவ்யக்ரந்தங்களையும் அருளிச்செய்தருளும்படியாயிற்று. பிள்ளைலோகாசார்யரருளிச்செய்த ரஹஸ்யங்களில் ஸ்ரீ வசநபூஷணம் தத்வத்ரயம் முமுக்ஷுப்படி என்கிற மூன்று ரஹஸ்யக்ரந்தங்கள் மிகச் சிறந்தவைகளும் ப்ரதானங்களுமாகையாலே அம்மூன்றுக்கும் வியாக்கியானமிட்டருளினர். பிள்ளை லோகாசார்யருடைய திருத்தம்பியாரான அழகியமணவாளப்பெருமாள் நாயனார் அருளிச்செய்த ஆசார்ய ஹ்ருதயமென்னும் ரஹஸ்ய ரத்னத்திற்கு வியாக்கியானமிட்டருளினர். பெரியவாச்சான்பிள்ளை நாலாயிரத்திற்கும் பூர்த்தியாக வியாக்கியானமருளிச்செய்திருந்தும் அதில் பெரியாழ்வார்திரு

மொழி முதற்பாசுரம் தொடங்கி "வாக்குத்தூய்மை யிலாமையினாலே மாதவாவுன்னை" (5-1-1) என்கிறவளவும் வியாக்கியானம் கரையானுக்கு இரையாகி துர்லபமாய் விட்டபடியாலே அவ்வளவுக்குத் தாம் வியாக்கியானமிட்டருளினர். இராமானுச நூற்றந்தாதிக்கு உரையிட்டருளினர். அருளாளப் பெருமாளெம்பெருமானாருளிச் செய்த ஞானசாரப் பிரமேய சாரங்களுக்கு ஸம்வாத ப்ரமாணங்களைச் சேர்த்தருளினர். கீதைக்குத் தாத்பர்ய தீபமென்றொரு வியாக்கியானம் இட்டருளினர். ஈடு முப்பத்தாறாயிரப்படிக்கும் தாமருளிச்செய்த ரஹஸ்ய வ்யாக்கியானங்களுக்கும் பிரமாணத்திரட்டுகள் ஸங்க்ரஹித்தருளினர். திருவாராதந ப்ரயோகமொன்று திருவாய் மலர்ந்தருளினர். உபதேச ரத்தினமாலை, திருவாய்மொழி நூற்றந்தாதி, ஆர்த்தி என மூன்று தமிழ்ப் பிரபந்தங்களருளிச் செய்தார். தேவராஜமங்களமும் யதிராஜ விம்சதியு மருளிச்செய்தார். மற்றும் ஸ்ரீஸூக்தி விசேஷங்களுண்டாகில் கண்டுகொள்வது. முக்தகங்கள் பலவுண்டு. ... ... (12)

13. உலகில் ஸ்ரீஸூக்திகளருளிச் செய்தவர்கள் பல ஆசார்யர்களுமுண்டு. எனினும், மணவாளமாமுனிகளின் திவ்ய ஸ்ரீஸூக்திகளின் மாதுர்யமும் காம்பீர்யமும் அர்த்த புஷ்டியும் ரஸபுஷ்டியும் அநிதரஸாதாரணமாகவே யிருக்கும். * நரமூலம் லிக்க்யதே கிஞ்சித் நாநபேக்ஷித முச்யதே * என்னும்படி யமைந்த வியாக்கியானம் மாமுனிகளுடையதேயாம். வேறு எந்த ஆசிரியரும் இங்ஙனே வியாக்கியானம் அமைக்கக் கற்றிலர் என்றால் இது அபிமாநோக்தியாகாது. தத்வத்ரயவியாக்கியானாதிகளில் பல மதாந்தரங்களைக் கண்டித்து எழுதினாலுங்கூட ஒருவருடைய மனமும் நோகாதபடிக்கும் வ்யர்த்ததூஷண பரிஹாஸங்களைச் சிறிதும் புகவிடாதபடிக்கும், எந்த இடத்தை யெடுத்தாலும் சாஸ்த்ரார்த்தமே கைகொள் கனியாம்படிக்கும் 'ஸகலசாஸ்த்ரஸாகர பாரங்கதர் இவரொருவரே' என்று திண்ணமாக எண்ணும்படிக்கும், அநந்வயம் க்லிஷ்டாந்வயம், மயங்கவைத்தல் முதலிய தோஷங்களுக்குச் சிறிதும் இடமில்லாதபடிக்கும் ஸ்ரீஸூக்திகளருளிச் செய்தவர் மாமுனிகளொருவரே. ஸூத்ரம் போன்ற பிள்ளை லோகாசார்ய திவ்ய ஸூக்திகளுக்கு அவதாரிகையிடுகிற அழகும் மூலத்திற்கு அர்த்தமருளிச்செய்கிற வைகரியும், ஆங்காங்கு அர்த்தங்களைப் பிண்டீகரித்து நிகமித்தருளுகிற அற்புதமும் * உள்ளுந்தோறு மென்னெஞ்சு எரிவாய் மெழுகொக்கும். வஸ்துத: இவ்வாசிரியருடைய ஸ்ரீஸூக்திகளை ஸேவித்த பின்பு இன்னொரு வாக்கில் வாயை வைத்தால் * ஸ்திதேரவிந்தே மகரந்தநிர்ப்பரே மதுவ்ரதோ நேக்ஷுரகம் ஹி வீக்ஷதே * என்ற ஸூக்திக்கு விருத்தமாகச் செய்கிறோமென்று தோன்றுகிறதேயன்றி வேறில்லை. (13)

14. ஆசாரியர்கள் ஜீவித்திருக்கும் நாளில் தம்மை அடிபணிந்தவர்களுக்கு உஜ்ஜீவநோபாயமாக உபதேசங்களைச் செய்வது உபகாரமெனப்படும். பிற்காலத்தவர்களும் நெடுநாள் வாழும்படி நூல்களை இயற்றி வைப்பது மஹோபகாரமெனப்படும். இத்தகைய மஹோபகாரம் செய்தருளின ஆசார்யர்களையும் அவர்களின் உபகார விசேஷங்களையும் நாம் அநுதினமும் அநுக்ஷணமும் சிந்தை செய்யவேண்டும். ஸ்ரீமந்நாதமுனிகள் ந்யாயதத்வம் என்றொரு மஹாக்ரந்தமருளிச் செய்திருந்ததாகத் தெரியவருகிறது. ஆனால் அது நெடுநாளைக்கு முன்னமே லுப்தமாய் விட்டதால் நம்போல்வார்க்கு அதை ஸேவிக்க பாக்யமில்லையாயிற்று. தேசிகன் பணித்த குருபரம்பராஸாரத்தில் "இவ்வாசார்யர்களில் ஈச்வரமுனிகள் பிள்ளை நாதமுனிகள்; இவர் ந்யாயதத்வ மென்கிற சாஸ்த்ரமும் யோக ரஹஸ்யமுமருளிச் செய்தார்" என்றிருக்கையாலே யோகரஹஸ்யமென்றொரு க்ரந்தமுமருளிச் செய்திருந்ததாக அறியலாகிறது. ந்யாயதத்வமென்னும் மஹாக்ரந்தத்தின் மங்களச்லோகம் மாத்திரம் ரஹஸ்

யத்ரயஸாரத்தில் தத்வத்ரயசிந்தநாதிகாரத்திலும் த்வயாதிகாரத்திலும் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. அது வருமாறு—* யோவேத்தி யுகபத் ஸர்வம் ப்ரத்யக்ஷேண ஸதா ஸ்வத:, தம் ப்ரணம்ய ஹரிம் சாஸ்த்ரம் ந்யாயதத்வம் ப்ரசக்ஷ்மஹே * என்று. இவ்விரண்டு க்ரந்தங்களும் நமக்கு துர்லபமாய்விட்டது பெரிய குறையே. ... ... (14)

15. ஸ்ரீமந்நாதமுனிகளுக்குப் பின் ஆளவந்தாரே க்ரந்தமருளிச்செய்தவர். முன்னே ப்ரஸ்தாவித்த குருபரம்பராஸாரத்தில்—'நாதமுனிகள் பிள்ளை ஈச்வரபட்டாழ்வான்; அவர் பிள்ளை ஆளவந்தார். இவரருளிச்செய்த ப்ரபந்தங்கள் ஆகம ப்ராமாண்யமும் புருஷ நிர்ணயமும், ஆத்ம ஸித்தி ஈச்வரஸித்தி ஸம்வித்ஸித்தியென்கிற ஸித்தித்ரயமும், ஸ்ரீகீதார்த்தஸங்க்ரஹமும் ஸ்தோத்ரமும் சதுச்ச்லோகியும் ஆக எட்டு'' என்றிருக்கையாலே மேலேகுறித்த க்ரந்தங்களே ஆளவந்தாரருளிச்செய்தவையாம். இவற்றில் புருஷநிர்ணயமென்கிற க்ரந்தம் இப்போது துர்லபம். வெகுகாலத்திற்கு முன்னமே லுப்தமென்கிறார்கள். ஆகமப்ராமாண்யமும் ஸித்தித்ரயமும் கீதார்த்தஸங்க்ரஹமும் ஸ்தோத்ரரத்நமும் சதுச்ச்லோகியுமே இப்போது ப்ரசாரத்திலிருப்பவை. முந்தின இரண்டு திவ்யக்ரந்தங்களுக்குப் பூருவர்களின் வியாக்கியானம் அவதரிக்கவில்லை. பிந்தின மூன்று க்ரந்தங்களுக்கு உண்டு. ... (15)

16. ஆளவந்தார் திருவடிகளில் ஆச்ரயித்து உய்ந்தவர்களில் திருக்கச்சிநம்பிகள் தேவராஜாஷ்டகமருளிச்செய்தது தவிர, வேறு ஓராசார்யரும் ஒரு க்ரந்தமுமருளிச்செய்ததாகத் தெரியவில்லை. எம்பெருமானாருடைய திவ்யக்ரந்தங்கள் நவரத்தினமோ! நவநிதியோ! என்னலாம்படி ஒன்பதாக அமைந்திருக்கின்றன. கீதாபாஷ்யம், ஸ்ரீபாஷ்யம், வேதாந்த தீபம், வேதாந்தஸாரம், வேதார்த்தஸங்க்ரஹம், சரணாகதிகத்யம், ஸ்ரீரங்ககத்யம், ஸ்ரீவைகுண்டகத்யம், நித்யம்—என்பன. இவற்றுள் சரணாகதிகத்யம் முதலிய மூன்று கத்யங்களை ஒன்றுசேர்த்து கத்யத்ரயமென்று ஒரே க்ரந்தமாக வழங்குவர்களாயினும் அவை தனித்தனி க்ரந்தங்களேயாம். ஆகவே ஸ்வாமி ஸாதித்த திவ்யக்ரந்தங்கள் ஒன்பது. .... (16)

17. எம்பெருமானாருடைய ஒன்பது க்ரந்தங்களுள் வேதாந்ததீபம் வேதாந்தஸாரம் நித்யம் ஆகிய மூன்று க்ரந்தங்களுக்குத் தவிர மற்றவற்றுக்குப் பூருவர்களின் வியாக்கியானங்கள் அவதரித்திருக்கின்றன. கீதாபாஷ்யத்திற்கு தாத்பர்யசந்த்ரிகை, ஸ்ரீபாஷ்யத்திற்கு ச்ருத ப்ரகாசிகையும் ச்ருத ப்ரதீபிகையும். [ச்ருத ப்ரதீபிகையென்பதும் ச்ருத ப்ரகாசிகாசார்யரே அருளிச்செய்த ஸங்க்ரஹவ்யாக்கியானம். இது சதுஸ்ஸூத்ரிவரையிலுமே தெலுங்குலிபியில் நெடுநாளைக்குமுன் அச்சேறியிருக்கிறது]. ஸ்ரீபாஷ்யத்திற்கு—ச்ருதப்ரகாசிகைக்கும் முன்னே வியாக்கியானமவதரித்திருந்ததாக ச்ருதப்ரகாசிகையினால் தெரியவருகிறது. ஜிஜ்ஞாஸாதிகரணத்தில் "த்விசந்த்ரஜ்ஞாநாதாவபி அங்குல்யவஷ்டப்ப திமிராதிபி:" இத்யாதியருளிச்செய்துகொண்டுபோகையில் "அதவா கிமநேந பஹுநோபபாதந ப்ரகாரேண" இத்யாதி வாக்யபாடம் உண்டா இல்லையா என்பதை விமர்சியாநின்ற ச்ருதப்ரகாசிகாசார்யர் "அதவா கிமநேநேத்யாதிபாடோ பஹுஷு கோசேஷு த்ருச்யதே' என்று ஸாதித்துவிட்டு உடனே ''வ்யாக்ய்யாத்ருபி: வ்யாக்யாதச்ச'' என்று ஸாதித்திருக்கிறார். இதனால் தமக்குமுன்னே ஸ்ரீ பாஷ்யத்தை வியாக்கியானித்தவர்கள் சிலருண்டென்று ஸ்பஷ்டமாகக் காட்டப்பட்டதாகிறது. ச்ருதப்ரகாசிகை அவதரித்தபிறகு அது மறைந்திருக்கக்கூடும். வேதார்த்த ஸங்க்ரஹத்திற்கு ச்ருதப்ரகாசிகாசார்யரே தாத்பர்யதீபிகையென்கிற வியாக்கி

யான மருளிச் செய்திருப்பது ப்ரசாரத்திலுள்ளது. கத்யத்ரயத்தில் சரணாகதிகத்யத்திற்கு மாத்திரம் ச்ருதப்ரகாசிகாசார்யருடைய வியாக்கியானமுள்ளது. மூன்று கத்யங்களுக்கும் ஆச்சான் பிள்ளையின் மணிப்ரவாள வியாக்கியானமும் தேசிகனுடைய ஸம்ஸ்க்ருத வியாக்கியானமுமுள்ளன. மற்றுஞ்சில வியாக்கியானங்கள் லுப்தங்கள். ... .... (17)

18. எம்பெருமானுர் தம்முடைய திருவடிகளில் ஸாக்ஷாத்தாக ஆச்ரயித்திருந்தவர்களுள் திருவாய்மொழிக்கு ஸங்க்ரஹமாக வொரு வியாக்கியான மிடும்படி திருக்குருகைப் பிரான் பிள்ளானுக்கு நியமித்தருள அவர் ஆருயிரப்படி யென்று ப்ரஸித்தமாயுள்ள வியாக்கியானத்தை யருளிச் செய்தார். ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் முதன் முதலாகத் திருவவதரித்த மணிப்ரவாள க்ரந்தம் இதுவேயாகும். இது அவதரித்த வேளையின் மஹிமையினுல் திருவாய்மொழிக்கு மற்றும்பல வியாக்கியானங்கள் அவதரிக்கலாயின. அவற்றுள் ஈடு முப்பத்தாருயிரப்படி மிகச்சிறந்து விளங்குவது. அதற்குத்தான் பகவத்விஷயமென்று வ்யபதேசம். அதைக்கொண்டு போதுபோக்குவார்க்குப் பேரின்பவெள்ளப் பெருகும். (18)

19. நமது போது நல்ல போதாகக் கழியவேணுமென்கிற நினைவுடையவர்கள் கீழ்க்காணும் பத்து விஷயங்களை அடிக்கடி சிந்திக்கவேணும்; கூடியவரையில் அனுஷ்டானத்தில் கொண்டுவரவும் முயலவேணும். 1. அஹங்காரம் எல்லாப்படியாலும் ஸ்வரூபத்தைக் கெடுக்கவல்லதாகையாலே அது கழியும் வழி யென்னவென்று சிந்திக்கவேணும். 2. அந்த அஹங்காரத்தை வளரச்செய்கிற தீயாரோடு ஸஹவாஸத்தை யொழிக்கவேணும். 3. அஹங்காரம் முதலிய பல குற்றங்களை உபதேசம் முதலியவற்ருல் போக்கவல்லவர்களான மஹான்களை தேஹபந்துக்களாகவும் ஆத்மபந்துக்களாகவும் கிம்பஹுநா? ஸகலவித பந்துக்களாகவும் நினைத்து அவர்களையே உசாத்துணையாகக் கொள்ளவேணும். 4. ஞானபக்தி விரக்திகள் மலிந்த மஹான்களைக்கண்டால் நிலாத் தென்றல் சந்தனம் புஷ்பம் முதலியன கண்டாற்போலே நெஞ்சு குளிர்ந்திருக்கவேணும். 5. அஹங்காரத்தினுடையவும் அர்த்தகாமங்களினுடையவும் கெடுதல்களை அநவரதம் சிந்திக்கவேணும். சமதமாதி குணங்கள் வளரும்வழி பார்க்கவேணும். 6. பகவத் குணநுபவத்திலும் பூர்வாசார்ய ப்ரபாவ அநுஸந்தானத்திலுமே அதிக காலம் கழியும்படி நோக்கவேணும். 7. விலக்ஷணர்களுடைய ஞானமும் அனுட்டானமும் நமக்கு உண்டாகவேணுமென்று ஆசைப்படவேணும். 8. ஜ்ஞாநானுஷ்டானங்களை வளர்க்கவல்ல ஸத்துக்களை ஒரு நொடிப்பொழுதும் விட்டுப் பிரியாமலும் ஸ்வரூபத்தைக் கெடுக்கவல்ல நீசர்களைக் கண்ணெடுத்துப் பாராமலும் இருக்குமிருப்பை அருளவேணுமென்று அநவரதம் பகவானைப் பிரார்த்திக்கவேணும். 9. பிறரிடத்தில் மலைமலையான தோஷங்களிருந்தாலும் அவற்றில் கண் செலுத்தாமலும் குணலேசங்களையே மலையாகக்கொண்டு உகந்திருப்பதும், தோஷங்களே வடிவெடுத்திருக்கின்ற நமக்கு ஒரு குணமுமில்லையே யென்று நொந்திருப்பதும் நித்யமாகச் செல்லவேணும். 10. பிறரிடத்திலே தோஷங்களைப் பேசுவதானது நிர்மலமான ஆகாசத்திலே சேற்றைவாரி யெறியுமவன் செய்கைபோலே யாகுமத்தனையென்று திண்ணமாகக்கொண்டு, அஸூயையையும் அஹங்காரத்தையும் அறவே யொழித்தாலன்றி நாம் உய்ய விரகில்லையென்று துணிந்திருக்கவேணும். ஆக இவ்விஷயங்களை நிச்சலும் நெஞ்சிற்கொண்டிருப்பார்க்கு இங்குமங்குமெங்குமின்பமே. (19)

ஸ்ரீரஸ்து.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:   ஸ்ரீமத்வரவரமுநயே நம:

ஸ்ரீகாஞ்சீ. பிரதிவாதி பயங்கரம்

அண்ணங்கராசாரியர் ஸ்வாமி

எழுதிய

# நித்யாநுஷ்டாநபத்ததி

# ॥ नित्यानुष्ठान पद्धतिः ॥

## முன்னுரை

வைதிக வ்ருத்தியில் போது போக்கமுடியாமல் பெரும்பாலும் உத்தியோகங்களிலும் வியாபாரங்களிலும் ஊன்றியிருக்கும் ஆஸ்திகர்களில் தங்களுடைய அவகாசத்திற்குத் தக்கபடி செய்யக்கூடிய நித்யாநுஷ்டானுதி க்ரமங்களைத் தெரிந்து கொள்ள விரும்புவார் பலருளர், அன்னவர்களின் கோரிக்கையைப் பூர்த்தி செய்யவே இச்சிறு புத்தகம் எழுதப்படுகின்றது.

பின்மாலை படுக்கையை விட்டு எழுந்திருக்கும்போது அநுஸந்திக்கவேண்டியவை, தீர்த்தமாடும்போது அநுஸந்திக்கவேண்டியவை, தேவர்ஷி பித்ருதர்ப்பணம், குருபரம்பரைகள், திருவாராதனத்தில் அநுஸந்திக்கவேண்டியவை, அமாவாஸ்யை க்ரஹணம் முதலான ஸமயங்களில் செய்யவேண்டிய தர்ப்பண க்ரமம், யஜ்ஞோபவீதமணியும்போது சொல்லவேண்டியவைகள், இரவில் சயனிக்கும்போது அநுஸந்திக்க வேண்டியவை முதலானவையெல்லாம் இச்சிறு புத்தகத்தில் விளக்கப்படும்.

### பின்மாலை துயில் விட்டெழுதல்.

ஹரிர்ஹரி:, ஹரிர்ஹரி: என்று சொல்லிக்கொண்டே படுக்கையை விட்டெழுந்ததும் கைகாலலம்பி ஆசமனமும் ப்ராணுயாமமும் செய்து சுத்தமான வோரிடத்திலிருந்துகொண்டு, இதன்கீழே குறிக்கப்படுகின்ற சுலோகங்களை யதாசக்தி அநுஸந்திப்பது. சுலோகங்கள் சொல்ல இயலாதவர்கள் மேலே எழுதப்படும் பாசுரங்களை யநுஸந்திப்பது. இரண்டையும் அநுஸந்திப்பது நலமே.

### (சுலோகங்கள்.)

हरिर्हरति पापानि दुष्टचित्तैरपि स्मृतः । अनिच्छयाऽपि संस्पृष्टो दहत्येव हि पावकः ॥

ஹரிர் ஹரதி பாபாநி துஷ்டசித்தைரபி ஸ்ம்ருத:,
அநிச்சயாபி ஸம்ஸ்ப்ருஷ்டோ தஹத்யேவ ஹி பாவக:.

वाराणस्यां कुरुक्षेत्रे नैमिशारण्य एव च । दत्तं स्यात्तेन येनोक्तं हरिरित्यक्षरद्वयम् ॥

வாராணஸ்யாம் குருக்ஷேத்ரே நைமிசாரண்ய ஏவ ச,
தத்தம் ஸ்யாத் தேந யேநோக்தம் ஹரிரித்யக்ஷரத்வயம்.

कौसल्यासुप्रजाराम ! पूर्वा सन्ध्या प्रवर्तते । उत्तिष्ठ नरशार्दूल ! कर्तव्यं दैवमाह्निकम् ॥

கௌஸல்யாஸுப்ரஜாராம பூர்வா ஸந்த்யா ப்ரவர்த்ததே.
உத்திஷ்ட நரசார்தூல! கர்த்தவ்யம் தைவமாஹ்நிகம்.

उत्तिष्ठोत्तिष्ठ गोविन्द ! उत्तिष्ठ गरुडध्वज ! । उत्तिष्ठ कमलाकान्त ! त्रैलोक्यं मङ्गलं कुरु ॥

உத்திஷ்டோத்திஷ்ட கோவிந்த ! உத்திஷ்ட கருடத்வஜ !,
உத்திஷ்ட கமலாகாந்த ! த்ரைலோக்யம் மங்களம் குரு.

(மேல் சுலோகங்கள் நடாதூரம்மாள் அருளியவை)

सत्सङ्गाद्भवनिस्स्पृहो गुरुमुखात् श्रीशं प्रपद्यात्मवान् प्रारब्धं परिभुज्य कर्मशकलं प्रक्षीणकर्मान्तरः ।
न्यासादेव निरङ्कुशेश्वरदयानिर्लूनमायान्वयः हार्दानुग्रहलब्धमध्यधमनिद्वारा बहिर्निर्गतः ॥ १

ஸத்ஸங்காத் பவநிஸ்ஸ்ப்ருஹோ குருமுகாத் ஸ்ரீசம் ப்ரபத்யாத்மவாந்
ப்ராரப்தம் பரிபுஜ்ய கர்மசகலம் ப்ரக்ஷீணகர்மாந்தர:,
ந்யாஸாதேவ நிரங்குசேச்வரதயாநிர்லூநமாயாந்வய:
ஹார்தாநுக்ரஹலப்தமத்யதமநித்வாரா பஹிர் நிர்க்கத:.

मुक्तोऽर्चिर्दिन पूर्वपक्षषडुदङ्मासाब्दवातांशुमद्ग्लौविद्युद्वरुणेन्द्रधातृमहितः सीमान्तसिन्ध्वाप्लुतः ।
श्रीवैकुण्ठमुपेत्य नित्यमजडं तस्मिन्परब्रह्मणः सायुज्यं समवाप्य नन्दति समं तेनैव धन्यः पुमान् ॥ २

முக்தோர்ச்சிர்திநபூர்வபக்ஷஷடுதங்மாஸாப்தவாதாம்சுமத்
க்லௌவித்யுத்வருணேந்த்ரதாத்ருமஹிதஸ் ஸீமாந்தஸிந்த்வாப்லுத:,
ஸ்ரீவைகுண்டமுபேத்ய நித்யமஜடம் தஸ்மிந் பரப்ரஹ்மண:
ஸாயுஜ்யம் ஸமவாப்ய நந்ததி ஸமம் தேநைவ தந்ய: புமாந்.

प्रातर्नित्यानुसन्धेयं परमार्थं मुमुक्षुभिः । श्लोकद्वयेन संक्षिप्तं सुव्यक्तं वरदोऽब्रवीत् ॥

ப்ராதர் நித்யாநுஸந்தேயம் பரமார்த்தம் முமுக்ஷுபி:,
ச்லோகத்வயேந ஸம்க்ஷிப்தம் ஸுவ்யக்தம் வரதோப்ரவீத்.

மேலிரண்டு ச்லோகங்களும் கஜேந்திரமோக்ஷ விஷயமாக
அம்மாள் தாமே யருளிச் செய்தவை)

ग्राहग्रस्ते गजेन्द्रे रुवति सरभसं तार्क्ष्यमारुह्य धावन् व्याघूर्णन्माल्यभूषावसनपरिकरो मेघगम्भीरघोषः ।
आबिभ्राणो रथाङ्गं शरमसिमभयं शंखचापौ सखेटौ हस्तैः कौमोदकीमप्यवतु हरिरसौ अंहसां संहते र्नः ॥

க்ராஹக்ரஸ்தே கஜேந்த்ரே ருவதி ஸரபஸம் தார்க்ஷ்யமாருஹ்ய தாவந்
வ்யாகூர்ணந்மால்யபூஷாவஸநபரிகரோ மேககம்பீரகோஷ:
ஆபிப்ராணோ ரதாங்கம் சரமஸிமபயம் சங்கசாபௌ ஸகேடௌ
ஹஸ்தை: கௌமோதகீமப்யவது ஹரிரஸௌ அம்ஹஸாம் ஸம்ஹதேர் ந:.

नक्राक्रान्ते करीन्द्रे मुकुलितनयने मूलमूलेति खिन्ने नाहं नाहं न चाहं न च भवति पुनस्तादृशो मादृशेषु ।
इत्येवं त्यक्तहस्ते सपदि सुरगणे भावशून्ये समस्ते मूलं यः प्रादुरासीत् स दिशतु भगवान् मङ्गलं सन्ततं नः ॥

நக்ராக்ராந்தே கரீந்த்ரே முகுலிதநயநே மூலமூலேதி கிந்நே
நாஹம் நாஹம் ந சாஹம் ந ச பவதி புநஸ் தாத்ருசோ மாத்ருசேஷு.
இத்யேவம் த்யக்தஹஸ்தே ஸபதி ஸுரகணே பாவசூந்யே ஸமஸ்தே
மூலம் ய: ப்ராதுராஸீத் ஸ திசது பகவாந் மங்கலம் ஸந்ததம் ந:.

(அம்மாள் தாமேயருளிச் செய்த பரத்வாதி பஞ்சகம்)

(பரத்வநிலை)

उद्यद्भानुसहस्रभास्वरपरव्योमास्पदं निर्मलज्ञानानन्दघनस्वरूपम् अमलज्ञानादिभिष्षड्गुणैः ।
जुष्टं सूरिजनाधिपं धृतरथाङ्गाब्जं सुभूषोज्ज्वलं श्रीभूसेव्यमनन्तभोगिनिलयं श्री वासुदेवं भजे ॥

உத்யத்பாநுஸஹஸ்ரபாஸ்வரபரவ்யோமாஸ்பதம் நிர்மல
ஜ்ஞாநாநந்தகநஸ்வரூபம் அமலஜ்ஞாநாதிபிஷ் ஷட்குணை:.
ஜுஷ்டம் ஸூரிஜநாதிபம் த்ருதரதாங்காப்ஜம் ஸுபூஷோஜ்ஜ்வலம்
ஸ்ரீபூஸேவ்யமநந்தபோகிநிலயம் ஸ்ரீவாஸுதேவம் பஜே.

(வ்யூஹநிலை)

आमोदे भुवने प्रमोद उत सम्मोदे च सङ्कर्षणं प्रद्युम्नञ्च तथाऽनिरुद्धमपि तान् सृष्टिस्थिती चाप्ययम् ।
कुर्वाणान् मतिमुख्यषड्गुणवरैर्युक्तान् त्रियुग्मात्मकैः व्यूहाधिष्ठितवासुदेवमपि तं क्षीराब्धिनाथं भजे ॥

ஆமோதே புவநே ப்ரமோத உத ஸம்மோதே ச ஸங்கர்ஷணம்
ப்ரத்யும்நஞ்ச ததாநிருத்தமபி தாந் ஸ்ருஷ்டிஸ்திதீ சாப்யயம்,
குர்வாணாந் மதிமுக்க்யஷட்குணவரைர் யுக்தாந் த்ரியுக்மாத்மகை:
வ்யூஹாதிஷ்டிதவாஸுதேவமபி தம் க்ஷீராப்திநாதம் பஜே.

(விபவ நிலை)

वेदान्वेषण मन्दराद्रिभरण क्ष्मोद्धारण स्वाश्रित-प्रह्लादावन भूमिभिक्षण जगद्विक्रान्तयो यत्क्रियाः ।
दुष्टक्षत्रनिबर्हणं दशमुखाद्युन्मूलनं कर्षणं कालिन्द्या अतिपापकंसनिधनं यत्क्रीडितं तं नुमः ॥

வேதாந்வேஷண மந்தராத்ரிபரண க்ஷ்மோத்தாரண ஸ்வாச்ரித
ப்ரஹ்லாதாவந பூமிபிக்ஷண ஜகத்விக்ராந்தயோ யத்க்ரியா:,
துஷ்டக்ஷத்ரநிபர்ஹணம் தசமுகாத்யுந்மூலநம் கர்ஷணம்
காளிந்த்யா அதிபாபகம்ஸநிதநம் யத்க்ரீடிதம் தம் நும:.

(அந்தர்யாமி நிலை)

यो देवादि चतुर्विधेषु जनिषु ब्रह्माण्डकोशान्तरे सम्भक्तेषु चराचरेषु च विशन्नास्ते सदाऽन्तर्बहिः ।
विष्णुं तं निखिलेष्वणुष्वणुतरं भूयस्सु भूयस्तरं स्वाङ्गुष्ठप्रमितं च योगिहृदयेष्वासीनमीशं भजे ॥

யோ தேவாதி சதுர்விதேஷு ஜநிஷு ப்ரஹ்மாண்டகோசாந்தரே
ஸம்பக்தேஷு சராசரேஷு ச விசந்நாஸ்தே ஸதாந்தர் பஹி:,
விஷ்ணும் தம் நிகிலேஷ்வணுஷ்வணுதரம் பூயஸ்ஸு பூயஸ்தரம்
ஸ்வாங்குஷ்டப்ரமிதஞ்ச யோகிஹ்ருதயேஷ்வாஸீநமீசம் பஜே.

(அர்ச்சாவதார நிலை)

श्रीरङ्गस्थलवेङ्कटाद्रिकरिगिर्यादौ शतेऽष्टोत्तरे स्थाने भौमनिकेतनेष्वपि सदा सान्निध्यमासेदुषे ।
अर्चारूपिणमर्चकाभिमतितः स्वीकुर्वते विग्रहं पूजां चाखिलवाञ्छितान् वितरते श्रीशाय तस्मै नमः ॥

ஸ்ரீரங்கஸ்தலவேங்கடாத்ரிகரிகிர்யாதௌ சதேஷ்டோத்தரே
ஸ்தாநே பௌமநிகேதநேஷ்வபி ஸதா ஸாந்நித்யமாஸேதுஷே.
அர்ச்சாரூபிணமர்ச்சகாபிமதித: ஸ்வீகுர்வதே விக்ரஹம்
பூஜாஞ்சாகிலவாஞ்சிதாந் விதரதே ஸ்ரீசாய தஸ்மை நம:.

प्रातर्विष्णोः परत्वादिपञ्चकस्तुतिमुत्तमाम् । पठन् प्राप्नोति भगवद्भक्तिं वरदनिर्मिताम् ॥

ப்ராதர் விஷ்ணோ: பரத்வாதிபஞ்சகஸ்துதிமுத்தமாம்.
படந் ப்ராப்நோதி பகவத்பக்திம் வரதநிர்மிதாம்.

(இப்பத்து ச்லோகங்களையும் கண்ட பாடம் செய்வது சிரமமாக இருந்தால் முதலிரண்டு சுலோகங்களை மட்டும் அநுஸந்திப்பது. சிலநாள் வரை பின்மாலையில் புத்தகத்தைப் பார்த்தே வாசித்து வந்தால் நாளடைவில் எளிதாகப் பாடமாய் விடும்.)

திருப்பள்ளியெழுச்சியைப் பூர்த்தியாக அநுஸந்திப்பது. அல்லது முதற் பாசுரமும் முடிவு பாசுரமும்.

கதிரவன் குணதிசைச் சிகரம் வந்தணைந்தான் கனவிருளகன்றது காலையம் பொழுதாய்*
மதுவிரிந் தொழுகின மாமலரெல்லாம் வானவரரசர்கள் வந்து வந்தீண்டி*
எதிர்திசை நிறைந்தன ரிவரொடும் புகுந்த இருங்களிற் றீட்டமும் பிடியொடு முரசும்*
அதிர்தலி லலைகடல் போன்றுள தெங்கும் அரங்கத்தம்மா பள்ளி யெழுந்தருளாயே.

கடிமலர்க் கமலங்கள் மலர்ந்தன விவையோ கதிரவன் கனைகடல் முளைத்தன னிவனோ*
துடியிடையார் சுரிகுழல் பிழிந்துதறித் துகிலுடுத்தேறினர் சூழ்புன லரங்கா*
தொடையொத்த துளவமும் கூடையும் பொலிந்து தோன்றியதோள் [தொண்டரடிப்பொடி யென்னு
மடியனை* அளியனென்றருளி யுன்னடியார்க் காட்படுத்தாய் பள்ளி யெழுந்தருளாயே.

பிறகு சரீரசுத்தி க்ருத்யங்களை முடித்துக்கொண்டு பல் விளக்குதல் முதலியவற்றைச் செய்வது. பல் விளக்கும்போது உத்தரீயத்தைத் தலையில் சுற்றிக்கொண்டு உட்காரவேணும். பல் விளக்குவதற்கு முன்னும் பின்னும் ஆசமனம் செய்யவேணும். ஆசமனமென்பது எப்போதும் இரண்டு தடவை செய்யவேணும். பஹிர்ப்பூமிக்குப் போய் 12 தடவை கண்டூஷம் செய்த பிறகு மூன்று தடவை ஆசமனம் செய்யவேணும்.

(ஆசமநமந்த்ரம்—आचमनमन्त्रः)

(இளமையில் கற்றிருந்தாலும் நினைப்பூட்டுகிறபடி.)

अच्युताय नमः अनन्ताय नमः गोविन्दाय नमः ॥ केशवाय नमः नारायणाय नमः माधवाय नमः
गोविन्दाय नमः विष्णवे नमः मधुसूदनाय नमः त्रिविक्रमाय नमः वामनाय नमः
श्रीधराय नमः हृषीकेशाय नमः पद्मनाभाय नमः दामोदराय नमः ।

அச்யுதாய நம:. அநந்தாய நம:. கோவிந்தாய நம:. கேசவாய நம:. நாராயணாய நம:. மாதவாய நம:. கோவிந்தாய நம:. விஷ்ணவே நம:. மதுஸூதநாய நம:. த்ரிவிக்ரமாய நம:, வாமநாய நம:. ஸ்ரீதராய நம: ஹ்ருஷீகேசாய நம:. பத்மநாபாய நம:. தாமோதராய நம:.

(ப்ராணயாம மந்த்ரம்—प्राणायाम मन्त्रः)

ओं भूः. ओं भुवः. ॐ सुवः. ओं महः. ओं जनः. ओं तपः. ॐ सत्यम् । तत्सवितुर्वरेण्यं भर्गो देवस्य धीमहि । धियो यो नः प्रचोदयात् । ओमापो ज्योतीरसः अमृतं ब्रह्म भूर्भुवस्सुवरोम् ।

ஓம் பூ:. ஓம் புவ:. ஓம் ஸுவ:. ஓம் மஹ:. ஓம் ஜந:. ஓம் தப:. ஓம் ஸத்யம்.
தத் ஸவிதுர் வரேண்யம். பர்க்கோ தேவஸ்ய தீமஹி. தியோ யோ ந: ப்ரசோதயாத்.
ஓமாபோ ஜ்யோதீரஸ: அம்ருதம் ப்ரஹ்ம பூர்ப்புவஸ் ஸுவரோம்,

**தீர்த்தமாடும் க்ரமம்.** தடாகத்தில் (யதாஸௌகர்யம் ஏதேனும் நீர் நிலையில்) நீராடும் போது ஆசமனமும் ப்ராணாயாமமும் செய்து சில ச்லோகங்களையும் பாசுரங்களையும் அநுஸந்திக்க வேணும். (அவையாவன).

कावेरीमवगाहिषीय भगवद्भोगान्तरायीभवत्कर्मक्लेशफलाशयप्रशमनोद्वेलामलस्रोतसम् ।
जन्तोस्संसरतोऽर्चिरादिसरणिव्यासङ्गभङ्गाय या लोकेऽस्मिन् विरजेव वेल्लितजला श्रीरङ्गमालिङ्गति ॥

காவேரீமவகாஹிஷீய பகவத்போகாந்தராயீபவத்
கர்மக்லேசபலாசயப்ரசமனோத்வேலாமலஸ்ரோதஸம்.
ஜந்தோஸ் ஸம்ஸரதோர்ச்சிராதிஸரணிவ்யாஸங்கபங்காய யா
லோகேஸ்மிந் விரஜேவ வேல்லிதஜலா ஸ்ரீரங்கமாலிங்கதி.

तापत्रयीमैन्दवपुष्करिण्यां निमज्ज्य निर्वापयितास्मि यस्याः ।
अभ्यासतोऽपाम् अघमर्षणीनां चन्द्रस्सुधादीधितितामवाप ॥

தாபத்ரயீமைந்தவபுஷ்கரிண்யாம் நிமஜ்ஜ்ய நிர்வாபயிதாஸ்மி யஸ்யா:.
அப்யாஸதோபாம் அகமர்ஷணீநாம் சந்த்ரஸ் ஸுதாதீதிதிதாமவாப.

विगाहे यामुनं तीर्थं साधुवृन्दावने स्थितम् । निरस्तजिह्मगस्पर्शे यत्र कृष्णः कृतादरः ॥

விகாஹே யாமுநம் தீர்த்தம் ஸாதுப்ருந்தாவநே ஸ்திதம்,
நிரஸ்தஜிஹ்மகஸ்பர்சே யத்ர க்ருஷ்ண: க்ருதாதர:.

கொண்டைகொண்ட கோதைமீது தேனுலாவு கூனிகூன்
உண்டை கொண்டரங்க வோட்டியுண்மகிழ்ந்த நாதனூர்
நண்டையுண்டு நாரைபேர வாளைபாய நீலமே
அண்டை கொண்டுகெண்டை மேயுமந்த ணீரரங்கமே.

இலைத்தலைச் சரந்துரந்திலங்கை கட்டழித்தவன்
மலைத்தலைப் பிறந்திழிந்து வந்துநுந்து சந்தனம்
குலைத்தலைத் திறுத்தெறிந்த குங்குமக் குழம்பினோடு
அலைத்தொழுகு காவிரி அரங்கமேய வண்ணலே.

நின்றவண் கீர்த்தியும் நீள்புனலும் நிறைவேங்கடப்பொற்
குன்றமும் வைகுந்தநாடும் குலவிய பாற்கடலும்
உன்றனக் கெத்தனையின்பந்தரும் உன்னிணை மலர்த்தாள்
என்றனக்குமது இராமானுசா இவையீந்தருளே.

தீர்த்தத்தில் ப்ரணவத்தை யெழுதி அதில் ஆசார்யனுடைய ஸ்ரீபாத தீர்த்தத்தையும் கங்காதி நதிகளையும் ஆவாஹநம் செய்து "இமம் மே கங்கே யமுநே ஸரஸ்வதி" என்றும் "கங்கை கங்கை யென்ற வாசகத்தாலே கடுவினை களைந்திட கிற்கும் கங்கை" என்றும் "கங்கையிற் புனிதமாய காவிரி" என்றும் சொல்லிக்கொண்டு காதையும் மூக்கையும் விரல்களால் அமுக்கிக்கொண்டு ஹரிர்ஹரி: ஹரிர்ஹரி: என்று ஏழு முறை அவகாஹன ஸ்நானம் செய்வது.

**தீர்த்தமாடியான பிறகு தலையையும் உடலையும் துணியால் துடைத்துக் கொள்ளும்போது அநுஸந்திக்க வேண்டியவை :—**

काषायशोभि कमनीयशिखानिवेशं दण्डत्रयोज्ज्वलकरं विमलोपवीतम् ।
उद्यद्दिनेशनिभ मुल्लसदूर्ध्वपुण्ड्रं रूपं तवास्तु यतिराज ! दृशोर्ममाग्रे ॥

காஷாயசோபி கமநீயசிகாநிவேசம்
தண்டத்ரயோஜ்வலகரம் விமலோபவீதம்.
உத்யத்திநேசநிப முல்லஸதூர்த்வபுண்ட்ரம்
ரூபம் தவாஸ்து யதிராஜ ! த்ருசோர் மமாக்ரே.

एतानि तानि भुवनत्रयपावनानि संसाररोगशकलीकरणौषधानि ।
जिह्वातले मम लिखानि यथा शिलायां रामानुजेति चतुराण्यमृताक्षराणि ॥

ஏதாநி தாநி புவநத்ரயபாவநாநி ஸம்ஸாரரோகசகலீகரணௌஷதாநி.
ஜிஹ்வாதலே மம லிகாநி யதா சிலாயாம் ராமாநுஜேதி சதுராண்யம்ருதாக்ஷராணி.

कमलनयन वासुदेव विष्णो धरणिधराच्युत शङ्खचक्रपाणे ।
भव शरणमितीरयन्ति ये वै त्यज भट दूरतरेण तान् अपापान् ॥

கமலநயந வாஸுதேவ விஷ்ணோ தரணிதராச்யுத சங்கசக்ரபாணே!
பவ சரணமிதீரயந்தி யே வை த்யஜ பட தூரதரேண தாந் அபாபாந்,

रमादयित रङ्गभूरमण कृष्ण विष्णो हरे ! त्रिविक्रम जनार्दन त्रियुग नाथ नारायण ।
इतीव शुभदानि यः पठति नामधेयानि ते न तस्य यमवश्यता नरकपातभीतिः कुतः ? ॥

ரமாதயித ரங்கபூரமண க்ருஷ்ண விஷ்ணோ ஹரே !
த்ரிவிக்ரம ஜநார்தந த்ரியுக நாத நாராயண.
இதீவ சுபதாநி ய: படதி நாமதேயாநி தே
ந தஸ்ய யமவச்யதா நரகபாதபீதி: குத: ?

स्वपुरुषमभिवीक्ष्य पाशहस्तं वदति यमः किल तस्य कर्णमूले ।
परिहर मधुसूदनप्रपन्नान् प्रभुरहमन्यनृणां न वैष्णवानाम् ॥

ஸ்வபுருஷமபிவீக்ஷ்ய பாசஹஸ்தம் வததி யம: கில தஸ்ய கர்ணமூலே.
பரிஹர மதுஸூதநப்ரபந்நாந் ப்ரபுரஹமந்யந்ருணும் ந வைஷ்ணவாநாம்.

ये कण्ठलग्नतुलसीनलिनाक्षमालाः ये बाहुमूलपरिचिह्नितशङ्खचक्राः ।
ये वा ललाटफलके लसदूर्ध्वपुण्ड्राः ते वैष्णवा भुवनमाशु पवित्रयन्ति ॥

யே கண்டலக்நதுலஸீநலிநாக்ஷமாலா: யே பாஹுமூலபரிசிஹ்நிதசங்கசக்ரா:.
யே வா லலாடபலகே லஸதூர்த்வபுண்ட்ராஸ் தே வைஷ்ணவா புவநமாசு பவித்ரயந்தி.

*ஸ்நாநத்தின் பிறகு தேவர்ஷி பித்ரு தர்ப்பணம் செய்ய வேணும்.*
*ஆசமனமும் ப்ராணுயாமமும் செய்து*

श्री भगवदाज्ञया भगवत्कैङ्कर्यरूपं देवर्षिपितृतर्पणं करिष्ये ।

"ஸ்ரீபகவதாஜ்ஞயா பகவத்கைங்கர்யரூபம் தேவர்ஷிபித்ருதர்ப்பணம் கரிஷ்யே"

